

# தியானாநுபூதி




நூலாசிரியர் :

வண்ணச்சரபம்

அருள்திரு. தண்டபாணி சுவாமிகள்

திருவாமாத்தூர்




## வித்வான் திரு. வி. மு. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள்

## நினைவு மலர்

உ

குருதேவ துணை

# தியாகராநுபூதி



நூலாசிரியர்:

வண்ணச்சரபம்

**திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள்**

என வழங்கும்

**அருள்திரு. தண்டபாணி சுவாமிகள்**

திருவாமாத்தூர்



இஃது

அண்ணாமலைப் பல்கலைக்கழக முன்னாள் தமிழ் விரிவுரையாளர்

**வித்வான் திரு. வி. மு. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள்**

12—6—1981-ல் மறைவுற்றமை முன்னிட்டு

28—6—81-ல் சிதம்பரத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியின் போது

ஜெயசர் குமாரர்

திரு, டாக்டர், S. முருகன், M.B., B.S., D.C.H., அவர்கள்

பொருளுதவிகொண்டு பதிப்பித்து

வெளியிடப்பெற்ற

**நினைவு மலர்.**

1981

# முன்னுரை.

**நூல் :** திியானுநுபூதி என்னும் இவ்வரிய நூல், மன ஒருமைப் பாட்டைத் தரவல்ல தியான நெறியினை மேற்கொண்டு தாம் பெற்ற அனுபவங்களைச் சிறப்பித்துக் கூறும் அனுபூதி நூலாகும்.

**ஆசிரியர் :** வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். இவர் 1839-ல் திருநெல்வேலியில் தோன்றி இளமைமுதல் வேல் வழிபாடு செய்து அருந்தமிழ்க் கவிகள் எண்ணிலாதவை இயற்றி புலவர் புராணம், அறுவகை இலக்கணம் போன்ற நூல்களைத் தந்தனர். தமது பாடல்களைப் பனையோலைச் சுவடியில் தாமே எழுதினர். பல தல வழிபாடு செய்தனர். சீவ கருணை நெறி வளர்த்தனர். வள்ளற்பெருமானுடன் கருத்தொத்த நெறியினர். தவத்திலும் புலமையிலும் சிறந்து வளங்கிய சுவாமிகள் இறுதியில் 1898-ல் திருவாமாத்தூர்ச் சிவ தலத்தில் ஞான சமாதி கொண்டனர்.

**பதிப்பு :** சுவாமிகளருளிய நூல்களுள் ஒன்றான இவ்வரிய நூலைத் தமது தந்தையார் வித்துவான் திரு. வி. மு. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் நினைவு மலராகப் பதிப்பித்து திரு. டாக்டர், S. முருகன் M B, B S, D. S, H, அவர்கள் வெளியிடுகிறார். அவருடைய பண்பும் பணியும் பாராட்டுதற்குரியன.

**நன்றி :** நூற்கருத்துக்களைப் படித்துப் பயன்பெறும் அன்பர்கட்கும், பதித்து வழங்கிய திரு முருகன் அவர்கட்கும் நன்றி கூறித் திருவருள் எல்லோருக்கும் துணை புரிய வேண்டி வாழ்த்துகிறேன்.

திருவாமாத்தூர்,
விழுப்புரம்,
26—6—1981.

தி. மு. சங்கரலிங்கம்,
தமிழாசிரியர்,
கௌமார மடாலயம்,

## இரங்கற்பா.

தூய புகழ்ச்சோம சுந்தரம் பிள்ளை தமிழ்
மேய விரிவுரைசெய் மேன்மையினார்—சேயதில்லை
அண்ணா மலைப்பல் கழகத்தின் ஆசிரியர்
நண்ணெழுபத் தாருண்டி னார்.

பூவுலகில் வாழ்ந்துவிண்ணோர் புக்க நினைவாகப்
பாவு புகழ்த்தண்ட பாணிமுனி—நாவுரைத்துப்
போற்றுந் தியாரூடு பூதியினைத் தந்திட்டான்
தோற்றுமுரு கப்பேர்ச் சுதன்.

முருகநா மப்பேர் மொழியநிக ழின்றோன்
பெருக வருநலங்கள் பெற்றுத்—திருவருள்சேர்
ஈச னருளால் இனியசுடும் பத்தருடன்
நேசமுடன் வாழ்க! நிதம்.

அன்பன்:
அமுதமொழி சோம. சாமிநாதன்,
சாத்துக்கூடல்.

## நன்றியுரை.

என் அருமைத் தந்தையார் வித்துவான், திரு. வி. மு. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் நினைவு மலராக திருவாமாத்தூர் - வண்ணச்சரபம், ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் அருளிய நூல்கள் பலவற்றுள் மிகச் சிறந்த நூலாகிய தியாரூடுபூதி என்னும் இவ்வரிய நூலை வெளியிட உதவிய ஷெயூர் புலவர், திரு. தி. மு. சங்கரலிங்கம் அவர்கட்கும், இப்பணியில் என்னை ஆட்படுத்திய சாத்துக்கூடல் - திரு. அமுதமொழி சாமிநாத பிள்ளை அவர்கட்கும் எனது நன்றியுரியது.

இந்நூற் சிறப்பை ஓதி உணர்ந்து பயன்பெற அன்பர்களை வேண்டுகிறேன்.

அன்பன்,
S முருகன், M. B , B.S., D. S H.
நெய்வேலி-3.

குருவே துணை.

# தியானநுபூதி

## காப்பு

வயாநீங்கற் காமுயலும் மாதவச்சீ ராய
தியானநு பூதிநன்னூல் செப்பத் – தயாநாட்டங்
கொண்டகுரு ஆகியபல் கோடிதெய்வம் ஆகிஒன்றாய்த்
தொண்டர்உள்வாழ் உண்மை துணை.

தமிழடி யாகும் எழுத்துரு வுஞ்சந்த மாமுடியும்
இமிழ்திரைப் பாரில் எனக்கீந்த வெண்திரு இன்பவெள்ளத்(து)
அமிழ்பவர் வேண்டும் தியானநு பூதியும் ஆங்களித்தாள்
சிமிழ்முலைப் பாலமு தங்கொடுத் தாளுந் தினமுமுண்டே.

பலகலை தெரிந்திட் டாலும் பத்திமுன் னாகச் சொல்லும்
நலம்ஒரு மூன்றுற் றாலும் நண்ணுமா றனைத்துஞ் செய்து
குலவுசீர் எய்தி டாது;குருவடி(வு) ஆதி யாகப்
புலவர்செய் தியானம் ஒன்றில் புக்கவர் கைக்கொள்வாரே.

## நூல்

சித்திமுத்தி என்னும்இரு பேறும் பெற்றுத்
திரும்பாத வீட்டினிற்போய்ச் சேரு வார்க்குப்
பத்திவைராக் கியஞானம் என்னும் மூன்றும்
பக்குவமே; அவர்நடக்கும் பாதை தன்னைச்
சத்தியமாய் யோசிக்கில் தியானம் ஒன்றே;
சகுணமே அதற்கிசைவாம், சார்ந்து நின்றால்
புத்தியினுக்கு அடங்காநிர்க் குணமும் தோன்றும்
பூர்வதவப் பயனில்லார் பொருந்தி டாரே. (1)

தற்சீவ சாட்சிகுரு வடிவம் என்னச்
சாற்றும்நிலை சமரசத்தோர் தமக்கே ஆகும்
முற்சீவன் செய்ததவம் முதிர்ந்தால் உண்டாம்;
மூவிரண்டு சமயத்து மூர்த்தி மாரை

நற்சீவ திசையாகத் தியானிப் போர்க்கு
ஞானமெய்தும்; பற்பலரும் நாடு மாறு
பிற்சீவர் செய்துவைக்கும் உருவநாட்டம்
பிடித்தோரும் தக்கபயன் பெறுவார்; அன்றே. (2)

சகுணபரம் பரைநாட்டம் பெற்ற பல்லோர்
தனிவீட்டில் புக்கநலம் சாற்றக் கேட்டும்,
மிகுபனுவல் ஆய்ந்தமதி தன்னைக் கொண்டு
மேலான நிர்க்குணத்தை விரும்பி நாடல்
தகுதியல்ல; முடிந்தபொருள் அதுவா னாலும்
சகளத்தால் அன்றியதைச் சாரொண் ணாது
வெகுவிதத்தெய் வங்களுண்டென் றுழல வேண்டாம்
விளம்பும்ஒன்றே பலவடிவா விளங்கும் மாதோ. (3)

நீராலங் கட்டிஎனத் தடித்தல் போலும்
நெய்யுறைந்து கையினிடை நிலவல் போலும்
பேராகங் கொண்டுதெய்வம் நிற்கு மாகில்
பெருமைகுன்றும் எனக்கருதிப் பேசொண் ணாத
சீராரும் நிர்க்குணமே என்று கூவித் [பேசுவார்க்(கு)
திருஅருட்சத் தியைஇகழ்ந்து செத்துப்
ஈராறு சமயத்தோர் அடையும் பேறும்
எய்திடாது எனத்தெளிவ(து) எளிதன் றம்மா. (4)

இகம்பரம்என் றுரைக்குமிரு தலத்துள் ளாரும்
ஏத்தெடுக்கும் பெருவாழ்விற்கு இச்சை கொண்டோர்
திகம்பரமாம் பொதுவடிவைக் கருதொண் ணாது
திருவுருவாத் தியானித்தே தேற வேண்டும்
அகம்புறம்என் றையமுற்று வருந்தவேண்டாம்
அவ்விரண்டும் மனவெளியில் அடங்கு மாற்றால்
முகம்பிரசன் னமதாகத் தோற்றும் வண்ணம்
முயலலாம் களங்கமற்ற முறையும் ஈதே. (5)

எந்தவித மூர்த்தியையா னாலும் நேரே
இருவிழியால் கண்டுதொழு திறைஞ்சின் அன்றிப்
பந்தம்அறுது எனத்தெளிந்து துணிந்து பாடு
படும்அவர்கள் எல்லோரும் பகரக் கேண்மோ!

உந்தமக்கு மந்திரம்ஓர் துணையன் றேனும்
ஒழிப்பதியல் பன்றுஅதனால் ஒருசொல் ஆகிச்
சிந்தனையின் உதவியின்றி நாவுஞ் சொல்லும்
திறத்தினதாம் பழக்கமிகச் செய்யின் நன்றே. (6)

கண்டனஎல் லாம்தனது தெய்வம் ஆகக்
கருதிவழி படுநிலைகை வந்திட் டாலும்
கொண்டபிடி நழுவாமல் தியானம் செய்து
குறித்தஉருச் சாக்கிரத்தில் குலவப் பெற்று
விண்டமொழிக்கு உத்தாரம் விளம்பக் கேட்டு
விரும்பியவா முடித்தருளும் வீறும் தோய்ந்து
மண்டலமும் விண்டலமும் மதிக்க வாழ்ந்து
மாசற்ற வீடடைந்தோர் வல்லோர் தாமே, (7)

அகண்டபரி பூரணநிட் களமாம் தெய்வம்
அளவிறந்த நெறிதோறும் அன்பர் நாட்டம்
திகழ்ந்தபடி தோன்றும் அன்றிப், புராணம் சிற்பம்
செப்பும்விதிக்(கு) அடங்காது, தென்னாரூரில்
சகம்புகழ வரும்விகட கவி முன்னாகத்
தலைஓர்ஆ யிரத்தொடுஇரு தடந்தோள் காட்டி
அகந்தைமொழி கேட்டவிதம் உலகம் சொல்லும்
அபக்குவத்தோர்க்கு உரைத்தாலும் அறிந்தி டாரே. (8)

சகளஉபா சனைஆண்டான் தனது வேட்கைத்
தையல்அரு கடுத்தோரும் சாகச் செய்தான்
அகளநிரா மயஞான நிட்டைத் தாயு
மானவனை ஒருவன்எடுத்து அழலிற் சுட்டான்
குகன்அடிமை யாம்அருண கிரிஅன்று அந்தக்
கோபுரத்தில் பூவருதல் குறித்தேத் தாமல்
சுகமதிற்புக் கேகிஉடல் இழந்தான் கண்டீர்
தொண்டுசெய்யும் நன்னெறியைத் துறக்கொண்ணாதே(9)

தெய்வம்ஒன்றே என்பதுசத் தியமே ஆகும்
தெளிவில்லார் பலவிதமாத் தியானித் தாலும்
ஐவகைப்பூ தமுங்கடந்த அதுஅவ்வா றங்(கு)
அவிர்ந்துஅறிவு முதிர்ந்ததற்பின் அனைத்தும் தானாம்

பொய்வழித்தீ மையின்முயல்வார் மேலாம் தெய்வம்
போற்றினும்அ னையர்வணங்கும் புன்மைத் தெய்வம்
செய்வலிக்காற் றுதவிதம் அநுப வத்தில்
தேறல்அன்றி வேறொருவர் தெரிக்கொண் ணாதே. (10)

தானேதன் மூர்த்தியென்பார் சிலர், தான் அல்லாச்
சகலமும்என் பார்சிலர், ஓர் தன்னேர் இல்லாக்
கோனேஎன் பார்சிலர், எப் பொருளும் ஆன
குருஎன்பார் சிலர், எந்தக் கொள்கை யோரும்
தேனேர்செந் தமிழ்ச்சுவைஉண் டுஅணிமா ஆதிச்
சித்திமிகச் செய்துமனத் திருத்தி யெய்தி
மானேர்கண் ணார்கலவிச் சுகமுங் கைத்து
மறுபிறப்பில் லாதொழிந்தால் மாண்பி னோரே. (11)

ஒருவன்ஒரு மூர்த்தியினைத் தியானஞ் செய்தால்
உரைக்கும்பல் வடிவெடுத்து கனவில் தோன்றிப்
பெருமைமிகு சாக்கிரசொற் பனத்தில் வந்து
பேசல்அன்றிச் சாக்கிரத்தில் பிறர்வாய்ச் சொல்லா
மருவும்அச ரீரியுமாய்ப் பேசும், கேட்டு [தோறும்
மகிழ்ந்துஇறுமாந் திடவேண்டாம் வருந்துந்
இருவிழிமுற் குலவுமட்டும் முயல வேண்டும்
இளைப்புற்றால் அநுபவமும் இழந்து போமே. (12)

சாக்கிரத்தில் கண்டகுரு மூர்த்தி வார்த்தை
தன்னைநம்பி ஒருமுனிவன் தமிழ்த்தென் பாண்டி
காக்கவல்லான் முன்புபட்ட சளங்கேட் டுள்ளார்
கனவாதி யவற்றைநண்ணிக் களிக்கப் போமோ
தேக்குதிருத் தியில்நலம் சந் தேகம் ஆகும்
திருவருட்சா தனையைவெல்லும் திறத்தோர் உண்டோ
தாக்கசையின் நாடசையும் பேறுற் றோரும்
நலிவதற்காம் விதம்அறிந்து நடத்து மன்றே. (13)

தெய்வஅரு ளேநலம்என்று அளவில் ஆற்றல்
தெளிந்தபடி காண்பதற்காச் செபம் தியானம்
செய்வதற்குத் துணிவின்முழு மனமே வேண்டும்
சிறிதுகுறைந் தாலும்அது சீர்ப டாது

மெய்வழக்கில் பொய்கலக்கும் கொடிதாங் காட்டும்
வெறுத்துவிடக் கூடாது விண்ணும் மண்ணும்
உய்வதற்காம் விதங்கருதும் சரதந் தோய்ந்த
உள்ளத்தார் இகழினும்அ தோவு றாதே. (14)

இராகவன்கிட் டிணன்முதலோர் விண்டு என்றும்,
எழில்வேல்உக் கிரன்காழிக் கிறைவன் அன்னோர்
குராவுணிசேய் என்றும்,நுவல் வதுபோல் பல்லோர்
கூறல்முற்றும் அந்தந்தக் குறிதொட் டுய்ந்தோர்
தராதலம்உய் வதனிமித்தம் உதித்த வாருச்
சாற்றுமட்டும் தேர்ந்தஉபா சகரே னும்
பராவுமின்அன் னவன்தவம்வீண் போகி டாது
பரத்துவமுர் அவனமைத்த படியா மன்றே. (15)

கனவினுஞ்சிற் சிலபலிதம் ஆவ தாண்டு
கண்டனவல் லாம்நிசமாக் கருதில் துன்பம்
மனவெளிகொள் ளாதுவரும் அநுப வத்தில்
வந்தவற்றைக் கண்டமட்டில் மகிழ்தல் நன்றாம்
தினகரகோ டிகளனைய தெய்வம் ஒன்றே
தியானிக்கும் பலவடிவாத் திகழ்ந்திட் டாலும்
தனதுநிலை யுங்குறிக்கும் நாம ரூபத்
தன்மையும்போற் பலாபலங்கள் சாற்றாற் பாற்றே. (16)

மண்முதலாம் ஐந்துவகைப் பூதங்கட்கும்
மதிகதிர்க்கும் உயிர்க்கும்அதிட் டான மாகும்
எண்மயமே தமிழ்வண்ணத் தியல்பின் பேதத்து
எண்ணிறந்த கடவுளரா யிலங்கும், அந்த
வண்மைஅரன் ஆகமமா தியான் னூல்கள்
வகுத்திடினும் தவவலிபோ வலிய தாமாறு
உண்மிளிர்மூர்த் தியுமனமும் கல்லுஞ் சாலை
உருவமும்போன் றுரிஞ்சநிற்போர் உணர லாமே. (17)

ஞானஅருள் நெறிக்கடுத்த யோகத் தோரும்,
நலந்திகழ்சோ திடத்தோரும், நவைஎன் றேதல்
போல்நவில்பல் மதத்தோரும் அவர வர்க்குப்
போந்தபடி வாதிப்பார் பொதுவை நாடில்

கானமறை நெறிஆறே, அவைகலந்தே
கழிக்கரும்அ தீதமொன்றுங் கவினும் கண்டீர்
ஈனமிகும் புலைச்சமயம் இன்றொன் றுண்டா
யினும் அதுவும் அவ்விருமூன் றினது சார்பே. (18)

காமியம்வேண் டினும்கதிவேண் டினும்இ ரண்டும்
கலந்துறவேண் டினும்,சிவன்,மால் கவுரி, யானை
சாமி,எல்லோன் எனும்ஆறு தெய்வத் தொன்றைச்
சந்தேகம் இன்றிநண்ணத் தகும்அம் மார்க்கம்
யாம்இதனிற் சொல்வதல்ல குரவற் றேடி
இனிதருளப் பெறவேண்டும்; இசைத்தும் உள்ளேம்!
மாமிசம்,கள் அரக்காதி அணுவும் ஆகா;
மந்திரமும் தந்திரமும் மனந்தான் மன்றே. (19)

அக்கரத்தால் சக்கரத்தால் குப்பம் தன்றல்
ஆலயத்தால் ஆராதித்து அனைத்தும் தாண்டும்
பக்குவத்தும் பாவனையை விடக் கூடாது
பலநூலும் இனிப்பிறக்கும் பாவத் தோரும்
முக்கியம்ஈ தல்லவென்று விளையாட் டாக
மொழிவதுண்டு, நம்பிவிட்டால் மோசஞ்சொன்னேன்,
திக்கொருங்கும் இருந்ததலத் துணர வல்ல
சிவயோகத் தோர்களுக்கும் தியானம் உண்டே. (20)

எட்டுவகைச் சித்தியும்பொய் யான மாயை
எனச்சொல்வார்; அகண்டமயம் யானே என்பார்;
திட்டெனஓர் புலியேனும் அரசன் ஏவும்
சேவகன்ஆ யினும்எதிர்த்தால் திடுக்கங் கொள்வார்
சுட்டகனல் போல்மிடியும் நோயும்வந்தால்
சொல்வானேன் எந்தவிதத் துயர்உற் றேனும்
தொட்டொருமூர்த் தியின்வடிவைத் தியானஞ் செய்து
சுகமடைந்து தனிவீட்டில் தோய்தல் நன்றே. (21)

பலகலையின் மந்திரமும் பலிப்ப தெண்ணிப்
பார்த்து,வா யிகமெனச்சொல் பதமுந் தாண்டிக்
கலகமிடுஞ் சமையவிகற் பமுந்தீர்ந் து,ஆனை
கண்டகுரு டரைத்தேற்றும் கவிதை பாடும்

புலவருக்கே மூர்த்திஉபா சனைச்சி ரத்தும்
புல்லறிஞர்க் கேதுசெய்யப், புழுத்துக் கொட்டும்
மலமுதற்பார்க் குந்துமது கண்ணில் தெய்வ
வடிவுகண்டால் ஞானபங்கம் வரும்என் பாரே. (22)

சச்சிதா னந்தபரம் பொருளே எந்தச்
சமயத்தும் திகழும்எனச் சாற்றுந் தன்மை
உச்சிமணிச் சேடன்மக மேரு வெற்பை
ஒருங்குபற்றல் போலும்,ஒரு மூர்த்தி தானே
நச்சியவா றுளிறுமென்கை ஒருபைந் நாகம்
நவிலும்அதன் ஒருகுவட்டை நண்ணல் போலும்
மெச்சியுரைத் தற்கரிதாம் தனிவீட் டின்பம்
மேவும்அவர்க் கிவ்விரண்டும் விருப்பம் ஆமே. (23)

என்கடவு ளேஉயர்ச்சி யென்று சொல்வான்
இறுமாந்து நாட்கழியா துஏங்கி வாடித்
தன்கடவுள் திருவுருவைக் காண வேண்டித்
தவித்தானேல் சமரசத்தோர் தம்மில் சேர்வான்
பின்கடவுள் வேற்றுமைதோற் றாது, சொன்னல்
பிணங்கிடான், அவரோடும் பேசிக் கொள்வான்
முன்கடவுள் வரக்கண்டும் புவியோர் உய்யும்
முறைகருதிப் பலவாறு மொழிவா ருண்டே. (24)

சமையநெறி தொட்டுநின்று சாதித்து உண்மைத்
தவம்புரிந்து தன்அறிவே சாட்சி யாகச்
சிமையம், அலைவாரி கனல்வாளுந் தெய்வத்
திருவருளால் தாண்டிஉய்ந்து சிந்தை வேட்கை
அமையநல்குங் குருவைநாடுஞ் சமர சச்சீர்
அநுபூதி உடையார்போல் அகில மாவில்
குமையுமவர் தம்மையெண்ணில் நிறத்தின் பெட்பால்
குலவகினம் போல்வம்எனும் கொக்குஒப் பாரே. (25)

எத்தெய்வம் சீக்கிரத்தில் கருணை செய்வ(து)?
எனவிசா ரிப்பவன்புண் ணியமட் டுள்ளோன் ;
இத்தெய்வ மேஎனதுஎன் றுரைப்போன் முன்னாள்
என்றமட்டும் உபாசித்தோன் ; ஏதே தெல்லாம்

பொய்த்தெய்வம் என்பவன்மா பாவி ; வானில்
புலவர்பிரான் ஆதியாய்ப் புவியில் வந்தோர்
மெய்த்தெய்வ மேருருவாய் அறிவில் நின்று
விளக்குவதால் அளவில்இன்பம் மேவு வாரே. (26)

தெய்வஉருத் தியான நெறி சிறிதும் இன்றிச்
செபம்ஒன்றே செய்குவது சிதடர் மார்க்கம் ;
ஐவகையாம் பொறியும்அடங் கிடச்சற் றேனும்
அசையாது குறியில்நிற்றல் ஆன்றோர் கொள்கை ;
மெய்வழக்காம் சமரசந்தேர்ந் திரண்டுந் தோய
விரும்புவது சித்தர்குணம் ; மேனாட் பூசித்(து)
உய்வுஅணுப்போன் றாயினும்பெற் றிருந்தோர்க் கன்றி
உயர்புகழ்த்தீஞ் சுவைத்துதிவாக் குதித்தி டாதே. (27)

மலமான களிம்புறுசெம் பனைய நெஞ்சை
மாதவமாங் கனலிலிட் டு, வல்லோர் சொல்லும்
நலமான மருந்ததனால் வேதிப் போரே
நனவுகன வினில்திகழும் ஞாயம் எல்லாம்
குலமாற்றே, சித்தியென்னும் வங்கத் துக்குக்
குலையாமல் நிற்குமுன்னங் குதிக்க வேண்டாம்
பலகோடி பகையுண்டு பதறு வீரேல்
பழிப்புண்டாம் அநுபவத்தைப் பகர்ந்திட் டேனே. (28)

கண்டமெனப் பலர்நுவலும் சகள நாட்டக்
காரருக்கும் தனிஅகண்டா கார ஞானம்
உண்டுஅதுதான் வேறுதெய்வம் இலைஎன் றோர்தல்
உயர்அகண்டம் எனப்பகர்திட் களத்தை உன்னும்
தொண்டரினும் மாயைவிராட் டாதி யாகச்
சொல்லுகின்ற கண்டபா வனையோ டுண்டு
விண்டவிதம் இரண்டுமொன் றாய்க் கலந்த ஞாயம்
மெய்த்தவத்தோர் சத்தியத்தில் விளங்கு மன்றே. (29)

காளிகறுப் பண்ணன்முதல் சிலவற் றாயுங்
கடவுளே விளங்குகின்றான், கண்ணா டிக்கண்,
ஞாளிமுகம் பார்க்கில்அது சிங்கம் காட்ட
ஞாயமுண்டோ? அதுபோல நாடு வார்தம்

நீளியசென் மாந்தர்புண் ணியத்திற் கான
நெறிதோற்றும், ஆயினும்முன் னிகழ்த்தும் ஆறும்
கோளிலவே அவற்றுள்ஒவ்வொன் றினில்பல் மூர்த்தம்
குலவும்அந்த விபரமுற்றும் கூறேன் ஞானே. (30)

முக்கண்ணும் மான்மழுவும் பொருந்தும் ஈசன்,
முடியில்மயிற் பீலிஅணி முகுந்தன், ஐந்து
கைக்கணநா யகன்வேலும் தண்டும் தாங்கும்
கரமுருகன், மூலைமுதிராக் கவுரி, கீழ்த்
திக்கதனில் எழுகதிராம் ஆறு மூர்த்தம்
சிறந்தனஎன் றுஅறிவுஅறிந்தோர் செப்பக் கேட்டேன்
எக்கடவுட்கு எவர்உரிமை பூண்டுற் றாலும்
எனக்கதுசம் மதம்முடிவில் ஏகந் தானே. (31)

அறிவரிய தெய்வத்துக்கு உருவஞ் சொல்லின்
ஆண்பெண்எனும் இரண்டுவிதம் அன்றி வேறு
குறியிலையால், குகன், வாலை. என்ன நூலோர்
கூறும்இவற் றொன்றைநம்பிக் கும்பிட் டுய்வீர்!
பொறிமயிலாம் குடிலைமிசை ஞான சத்தி
புனைந்தசெங்கைக் குரவன்எனப் போற்றுகின் றேன்
வெறிகமழ்மென் மலர்ப்பூசை பலநாட் செய்து
வியன்தமிழால் மிகத்துதித்துஇவ் விரகுற் றேனே. (32)

ஆயிரம்பொன் பெறும்ஆனை தன்னைத் தந்திட்(டு)
அரைப்பணமே பெறுந்தொறட்டி அதைநல் கார்போல்
மாயிருஞா லத்தின்மிகப் படுத்துந் தன்மை
வழிபடுமூர்த் திகட்குரிய வழக்கங் கண்மர்!
காயிரும்புண் டிடும்நீர்போல் போமா றெண்ணிக்
கலங்காமல் தியானிக்கை கடனும் சொன்னோன்;
போயினது வந்ததென்பார் தமக்கும், நீங்காப்
பொருள்என்பார் தமக்கும்இதோர் பொதுநூல்
முற்றே! (33)

முற்றிற்று.

## நூற்பயன் - வெண்பா.

செப்பத் துயர்போம், தியாகுரு பூதியின்பால்
முப்பத்து மூன்றும் முழுதுணர்ந்தோர் — கொப்பத்துக்
குஞ்சரத்தில் வாடார் குறைதீர்ந்த நெஞ்சகமாம்
பஞ்சரத்தில் வாழும் பரம்.

தெய்வமே துணை.

வாழியா நீடூழி மெய்யடியார்கள்.